

# இரண்டு வளையல்கள்

ஒவ்வொரு முறை அதைக் கழட்டி வாங்கும்போதும் அவனுக்குத் துக்கமாகவே இருந்தது. பெரும்பாலும் அவன் கேட்பது கூட இல்லை. அவளே வளையல்களைக் கழட்டிக் கொடுத்து விடுவாள். முன்பாவது சமையல் அறையில் போய் கழட்டி எடுத்து வருவாள். இப்போது அதுவுமில்லை. முகத்துக்கு எதிராகவே கைகளை நீட்டியபடி கழற்றிக் கொடுத்து விடுகிறாள்.

மெலிந்து நீண்டு போயிருந்த அந்தக் கை வளையல்களைக் கழட்டியதும் பார்க்க இயலாததாக உள்ளது. ரத்தம் வெளிறியபடி இருக்கும் அந்த விரல்கள் பாம்பைப் போல நீண்டு சுருண்டது போல இருந்தன.

பல இடங்களில் அந்த வளையல்கள் அடமானம் போயிருக் கின்றன. அந்த வளையல்கள் ராசியோ என்னவோ. உண்மையில் அது அம்மாவிடமிருந்தது. அம்மாவிடம் அதைப் போன்று நான்கு வளையல்கள் இருந்ததாகச் சொல்லுவாள். பட்டையான வளையல்.

அவன் கல்யாணம் செய்துகொண்ட பின்பு அம்மா அந்த இரண்டு வளையல்களையும் மருமகளுக்குக் கொடுத்தாள். திருநீறு போட்டுத் தேய்த்து அதைப் பளபளவெனக் கைக்குப் போட்டுக் கொண்டிருந்தாள். அவன் வளையல்களை வாங்கிக்கொண்டு நேரத்துக்கு தகுந்தாற்போல யாரிடமாவது அடமானம் வைப்பான்.

இரண்டு தடவைக்கு முன்பு கூட கணேசனின் சித்தியிடம் வைத்தான். கணேசனும் கூட வந்தான். சித்தி பெரும் உயரத்தில் இருந்தாள். பெரும் உடம்பு. கைகளில் நிறைய வளையல்

போட்டிருந்தாள். கணேசன் விஷயத்தைச் சொன்னதும் கேட்டாள்.

''எடுங்க பார்ப்போம்...''

சட்டைப் பையிலிருந்து எடுத்துக் கொடுத்தான். வாங்கிக் கையில் பார்த்தாள். பின்பு கேட்டாள்.

''எவ்வளவு வேணும்''

''ஆயிரம் ரூபா...''

''பழைய வளையல் போல இருக்கு. எங்க வாங்கினது''

''அம்மாவுடையது, செஞ்சது''

அவள் அந்த வளையல்களைக் கைக்குள் போட்டுப் பார்த்தாள். போகவில்லை மணிக்கட்டு பெரிதாக இருந்தது. உள்ளே திணித்தாள். உள்ளே எட்டிப் பார்த்துக் குரல் கொடுத்தாள்.

''அமுதா... சோப் டப்பா கொண்டா''

உள்ளிருந்து சின்னப் பெண் சோப் டப்பா கொண்டு வந்தாள். கையில் சோப்பைத் தடவியபடியே போட முயற்சித்தாள். உள்ளே போக மறுத்தது. அவனே சொன்னான்.

''சின்ன சைஸ், போகாதுங்க.''

''வளையல் அப்படித்தானுங்க இருக்கும், போடலாம்'' அவன் சோப்பை வெறித்தபடியே இருந்தான். ஒரு கையில் போட்டு விட்டாள். மறு கையில் போட கணேசனைக் கூப்பிட்டாள். இழுத்து வளையலைப் போட்டுவிட்டான். கையை இறுக்கியது போலத் தெரிந்தது. சிரித்தபடியே உள்ளே போய் பணம் கொண்டு வந்தாள். அன்றைக்கெல்லாம் அவனுக்கு அதே ஓடிக்கொண்டிருந்தது. நாய்களுக்குக் கழுத்தை இறுக்கிப் பட்டை போட்டது போல இருந்ததாகத் தோணியது. சாப்பிட இரவில் வரும்போது அவளிடம் சொன்னான். அவள் பதில் பேசாமலிருந்தாள்.

அதை மீட்பதற்கு ஆறு மாதத்துக்கு மேலாக ஆனது. மீட்கப் போகும்போது அவள் போகவில்லை. அடுத்த வாரமே திரும்பவும் வளையல்களை வாங்கிப் போனான். அப்போது அம்மா வந்திருந்தாள். அவனிடமே கேட்டாள்.

''என்னடா வெறுங்கையாக இருக்கா.''

''வேலை நடக்கலை, அதான் வளையலை அடமானம் வைச்சுட்டேன்.''

''கவரிங் வேறு வாங்கித் தரலாம்ல''

''வாங்கிட்டு வரேன்.''

இரண்டு நாள்களுக்கு முன்பு தெப்பம் பக்கம் போனபோது ஞாபகம் வந்தது. நிறைய வளையல்கள் குமித்துப் போட்டி ருந்தார்கள். கண்ணாடி வளையல்கள், சிவப்பு, வெள்ளை, நீலம் என. பட்டி, பட்டியான கண்ணாடி வளையல்கள் இருந்தது. அவனுக்கு சைஸ் தெரியவில்லை. வெள்ளையும் நீலமும் வாங்கிக்கொண்டு போனான்.

அவள் போட்டுக்கொண்டபோது பெரிதாக இருந்தது. இரவில் படுக்கும்போது அவள் தலையணையை ஒட்டி எல்லாவற்றையும் கழட்டி வைத்தாள். அவன் பார்த்தபடியே இருந்தான்.

''ஏன் கழட்டிட்டே.''

''லூசா இருக்கு. தூங்கும்போது உடைஞ்சிடும்.''

''சும்மா போட்டுக்கோ. உடைஞ்சா என்ன.''

போட்டுக்கொண்டாள். கண்ணாடி வளையல்கள் மோதும் சப்தம் அபூர்வமாக இருந்தது. அவள் உறங்கிய பின்பு கூட அவன் விழித்துக்கொண்டிருந்தான். பின்இரவில் அவள் புரண்டு படுத்தபோது கை அவன் மாரில் விழுந்தது.

கையை எடுத்து வைத்துக்கொண்டு வளையல்களைப் பிரித்து விட்டான். பின்பு விரல்களைச் சொடுக்கினான். வளையல்களைச் சப்தமிடச் செய்தான். அவளுக்கு விழிப்பு வந்தது. படுத்தபடியே கேட்டாள்.

''என்னங்க''

''ஒண்ணுமில்லை. தூங்கு''

அவள் கைகளைச் சேர்த்தவாறே உறங்கினான். விடியும்போது படுக்கையில் வளையல் உடைந்து கிடந்தது. குளிக்கும் இடத்தில்

மாடத்தில், அலமாரியின் டப்பாக்களின் ஊடே கழற்றி வைக்கப்பட்ட வளையல்கள் இருந்தன. ஒரு வாரத்துக்குப் பின்பு வெறுங்கையோடு திரிந்தாள்.

ஒரு நாள் இரவில் அம்மாவே அவளுடைய இரண்டு வளையல்கள் பற்றிச் சொன்னாள்.

அப்போது பார்க் பக்கம் கூட்டம் நடந்ததாம். காந்திதான் கூட்டத்தில் பேசுவதற்கு வந்தாராம். கூட்டம் கணக்கிலடங் காமல் இருந்ததாம். கலவரத்தில் உயிர் நீத்த குடும்பத்துக்கு நிதி திரட்ட பெண்கள் நகையைத் தர வேண்டும் என்று காந்தி பேசிவிட்டு நகைக்காக பெண்கள் பகுதிக்குத் துண்டை ஏந்திக் கொண்டு வந்தாராம். வளையல்கள், கம்மல்கள், காசுமாலைகள், வடசெயின்கள் என விழுந்தபடியே இருந்ததாம். அம்மா யோசிக்காமல் போட்டிருந்த இரண்டு வளையல்களைக் கழட்டிப் போட்டுவிட்டுப் பார்த்தாள்.

காந்தியின் சிரிப்பு அப்படியே மனசை அமுக்கியதாம். வீடு திரும்பும் வரைக்கும் அவளுக்கும் எதுவும் தோணவில்லையாம். இரவில் அப்பாவோடு பெரும் சண்டை. அழுதபடியே சொன்னாளாம்.

''எப்படி இ ரெண்டேகூட அடமானத்தில் இருந்து முழுகிப் போயிடும். அதுக்கு இப்படிப் போறது பரவாயில்லை.''

உண்மையில் காந்தி சுட்டுக் கொல்லப்பட்டபோது அவள் ஸ்கூல் போய்க்கொண்டிருந்தாள். நகரமே வெறிச்சோடியது அன்று. நிசப்தம் பரவிய தெருக்கள். சில பறவைகள் தெருவில் நிதானம் தெரியாது அலைந்தன. அம்மா அன்று சமையல் செய்யவில்லை அழுதாள். குடும்பத்து நபர் இறந்தது போல இருந்தது, அவள் கூட காரணம் தெரியாமல் அழுதாள். எங்கோ பஜனை நடப்பது போலக் கூடக் கேட்டது.

அம்மா மீதமிருந்த இரண்டு வளையல்களைத்தான் மரு மகளுக்குக் கொடுத்தாள்.

இந்த முறை வளையல்களைக் கழட்டி வாங்கும்போது அவளே சொன்னாள்.

''பேசாம வித்திட்டீங்கன்னா, எல்லாக் கடனையும் அடைச்சிட லாம்ல.''

''எதுக்கு, வேணா''

''எதுக்கு இருந்து, வித்துரலாம். வேற வேணும்னா பின்னாடி வாங்கிறலாம்.''

''அப்ப சாயங்காலம் வர்றயா கடைக்கு.'' அவள் மறுக்க வில்லை. மாலை தெருவெங்கும் விழித்திருந்தது. அவள் ஒர்க்ஷாப்புக்கு வந்தபோது வேலை பார்த்துக்கொண்டிருந்தான். மரத்தடியில் நின்றுகொண்டிருந்தாள். சேர்ந்து போனார்கள்.

அந்த வரிசையெங்கும் நகைக் கடைகளாக இருந்தன. முன்பு எப்போதோ குழந்தைக்கு செயின் வாங்க வந்த கடையின் ஞாபகமிருந்தது. அந்த செயின் எப்போதோ இருந்த இடம் தெரியாமல் போய்விட்டது.

சின்னக் கண்ணாடி அறைகளில் நகைகள். எத்தனை விதம் எனத் தெரியாது. உள்ளே உட்கார திண்டு போட்டிருந்தார்கள். அவன் நகையை எடுத்துக் கொடுத்தான். வாங்கி உரசிப் பார்த்துவிட்டுச் சொன்னார்.

''வேற நகை வாங்கிறீங்களா, பணமா.''

''பணம் வேணும்.''

''சின்னதா ஏதாவது வாங்கலாம்ல.''

பேசாமலிருந்தான். கடைக்காரர் சின்னப் பெட்டியை எடுத்து அவள் முன்பு வைத்துச் சொன்னார்.

''மோதிரம் பாருங்க, புது டிசைன் நிறைய இருக்கு.''

அவள் எதிர்ச் சுவரில் இருந்த நகைகளைப் பார்த்தபடியே இருந்தாள். அவனே வேண்டாமென்று தலையாட்டினான். எடை போட்டு சின்ன சிலேட்டில் கணக்கு போட்டுக் காட்டினார். அவனுக்கு எதுவும் புரியவில்லை, தலையாட்டினான். உள்ளிருந்து பணத்தை எண்ணிக் கொடுத்தார். வாங்கி எண்ணும் போது அவளே கேட்டாள்.

''கொலுசு இருக்கா.''

''இருக்குமா, எப்படி வேணும்.'' உள்ளிருந்து நிறைய மாடல்களை எடுத்துப் போட்டார். அவள் மாங்காய், மாங்காயாக

இருந்த கொலுசை எடுத்துக்கொண்டாள்.

வரும்போது தெப்பம் பக்கம் வந்து சில வளையல்கள் கூட வாங்கிக்கொண்டாள். கொலுசை அடர்நீலமான காகிதத்தில் கட்டிக்கொடுத்தார்கள்.

இரவில் அவள் அணிந்து கொண்டாள். அவள் நடந்துவரும் போது இந்தச் சப்தம் கேட்டபடியே இருந்தது. அப்போதுதான் அவனுக்குப் பட்டது. அவன் வளையலை விற்றதற்கு நினைவு படுத்தத்தான் இந்தக் கொலுசை வாங்கினாளோ. அதன் சப்தத்தில் இந்த ஞாபகம் மோதி சிதறுதே எனப் பட்டது. இருந்தும் அவனுக்கு ஆறுதலாக இருந்தது. கொலுசைக் கண்டிப்பாகக் கழட்டி அடமானம் வைக்க முடியாது என்பது.

இரண்டு நாள்களுக்குப் பின் குழந்தை அந்தக் கொலுசைப் போட்டுக்கொண்டு வந்தது. அவள் எப்போதும் போல் வெறு மனாக வந்தாள். பெரிய கொலுசு சின்னக் காலில் இருந்தது.

அவளிடம் கேட்டான்.

''ஏன் கழட்டிட்டே.''

''கடிக்குது, கொஞ்ச நாள் போனால் சரியாயிடும்.'' அவன் எதுவும் பேசவில்லை. குழந்தை கையில் கொலுசை எடுத்துச் சுற்றிக் கொண்டு வந்து கேட்டது.

''புது வளையல்பா. நல்லாருக்கா.'' தலையாட்டினான்.